# 1. விநாயகர் அகவல் - (ஔவையார் அருளியது)

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாடப்
பொன்அரை ஞாணும் பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீலமேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்

இரண்டு செவியும் இலங்கு பொன்முடியும்
திரண்டமுப்புரி நூல் திகழொளி மார்பும்
சொற்பதங் கடந்த துரியமெய்ஞ் ஞான
அற்புதன் ஈன்ற கற்பகக் களிறே
முப்பழம் நுகரும் மூடிக வாகனே
இப்பொழு தென்னை யாட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தானெழுந் தருளி
மாயாப் பிறவி மயக்க மறுத்தே
திருந்திய முதல்ஐந் தெழுத்துந் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளந்தனிற் புகுந்து

குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறம்இது பொருள்என
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தாற் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டி இன் செவியில்

தெவிட்டாத ஞானத் தெளிவையுங் காட்டி
ஐம்புலன் றன்னை அடக்கு முபாயம்
இன்புறு கருணையின் எனிதெனக் கருளிக்
கருவிக ளொடுங்குங் கருத்தினை யறிவத்(து)
இருவினை தன்னை அறுத் திருள் கடிந்து

தலமொரு நான்குந் தந்தெனக்கருளி
மலமொரு மூன்றின் மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந்திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங் காட்டி
ஆறா தாரத் தங்கிசை நிலையும்
பேறா நிறுத்திப் பேச்சுரை யறுத்தே
இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
கடையிற் கழுமுனைக் கபாலமுங் காட்டி
மூன்றுமண் டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக்

குண்டலி யதனிற் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலா தாரத்தின் மூண்டெழு கனாலக்
காலால் எழுப்புங் கருத்தறி வித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி
இடைச்சக் கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தின் உறுப்பையுங் காட்டுச்
சண்முக தூலமுஞ் சதுர்முகச் சூக்கமும்
எண்முக மாக இனிதெனக் கருளிப்

புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரியெட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்
கருத்தினிற் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக் கருளி
என்னை அறிவித் தெனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்தே
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்(து)
இருள்வெளி யிரண்டிற் கொன்றிட மென்ன
அருள் தரும் ஆனந்த தமளித்து என்செவியில்

எல்லை இல்லா ஆனந் தமளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்
சத்தத்தி னுள்ளே சதாசிவம் காட்டிச்
சித்தத்தி னுள்ளே சிவலிங்கங் காட்டிச்
அணுவிற் கணுவாய் அப்பாலுங் கப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலையறி வித்துத்

தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே
- - - -

## விநாயகர் துதி

பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன் - கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீஎனக்குச்
சங்கத் தமிழ் மூன்றுந் தா

ஒற்றை மருப்பும் ஓரிரண்டு கைத்தலமும்
வெற்றி புனைந்த விழிமூன்றும் - பெற்றதொரு
தண்டைக்கால் வாரணத்தைத் தன்மனத்தில்
எப்பொழுதுங்
கொண்டாக்கால் வாராது கூற்று

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் -உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனைமுகத்தானைக்
காதலாற் கூப்புவர்தம் கை

- - - - - - -- --

## 2. விநாயகர் திருஅகவல் - நக்கீரதேவர் அருளியது

சீர்தரு மூலச் செஞ்சுடர் விளக்கே
கார்நிற மேனிக் கற்பக் களிறே
அல்லல் வினையை யறுத்திடு ஞான
வல்லபை தன்ான மருவிய மார்பா
பொங்கர வணிந்த புண்ணிய மூர்த்தி
சங்கரனருளிய சற்குரு விநாயக
ஏழையடியேன் இருவிழி காண
வேழ முகமும் வெண்பிறைக் கோடும்
பெருகிய செவியும் பேழை வயிறும்
திருவளர் நுதலில் திருநீற் றழகும்
சிறுத்த கண்ணுஞ் சீதளப் பார்வையும்
நறுந்திகழ் நாசியும் நாண்மலர்ப் பாதமும்
நவமணி மகுட நன்மலர் முடியும்
கவச குண்டல காந்தியும் விளங்கச்
சிந்துரத் திலகச் சந்தனப் பொட்டும்
ஐந்து கரத்தி னழகும்வீற் றிருக்கப்
பாசவினையைப் பறித்திடு மங்குச
பாசத் தொளியும் பன்மணி மார்பும்
பொன்னா பரணமும் பொருந்து முந்நாலும்
மின்னா மெனவே விளங்குபட்டழகும்
உந்திச் சுழியும் உரோமத் தகமும்
தொந்தி வயிறுந் துதிக்கையுந் தோன்ற
வேதனு மாலும் விமலனு மறியாப்
பாதச் சதங்கைப் பவதொனி யார்ப்பத்
தண்டைச் சிலம்புந் தங்கக் கொலுசும்
எண்டிசை மண்டல மெங்கு முழங்கத்
தொகுது துந்துமி தொந்தோ மெனவே

தகுகு திந்திமி தாள முழங்க
ஆடிய பாதம் அண்டர்கள் போற்ற
நாடிமெய் யடியார் நாளுந் துதிக்கக்
கருணை புரிந்து காட்சி தந்தருள
இருளைக் கடிந்து எங்கும் நிறையப்
பொங்குபே ரொளியாய்ப் பொன்மலை போலத்
திங்கள் முடியான் றிருவுள மகிழ
வந்த வாரண வடிவையுங் காட்டிச்
சிந்தை தளர்ந்த சீரடியார்க்கு
இகபர சாதன மிரண்டு முதவி
அகவினைத் துன்ப மகந்தை யறுத்து
மூலாதார முச்சுடர் காட்டி
வாலாம் பிகைதன் வடிவையுங் காட்டி
மாணிக்க மேனி மலர்ப்பதங் காட்டிப்
பேணிப் பணியப் பீஜா க்ஷரமும்
ஓமென்று றுதித்த ஓங்காரத்துள்ளே
ஆமென் றெழுந்த அக்ஷர வடிவும்
இடைபிங் கலைகள் இரண்டின் நடுவே
கடைமுனை சூழிமுனைக் காபலமுங் குறிந்து
மண்டல மூன்றும் வாய்வோர் பத்துங்
குண்டலி யசைவிலி கூறிய நாடியும்
பூதமும் பொறியும் புகழ்குண மூன்றும்
வாதனை செய்யு மறிவையும் காட்டி
ஆறாதார அங்குச நிலையைப்
பேறாகி நின்ற பெருமையுங் காட்டிப்
பஞ்ச மூர்த்திகள் பாகத் தமர்ந்த
பஞ்சத்த திகளின் பாதமும் காட்டி
நவ்விட மௌவும் நடுவணை வீட்டில்
அவ்வு மாக்கினை அனாதி சதாசிவம்

மைவிழி ஞான மனேன்மணி பாதமும்
நைவினை நணுகா நாதகீதமும்
கண்டு வணங்கக் கண்ணைத் திறந்து
விண்டல மான வெளியையும் காட்டி
ஐம்பரத் தோரெழுத் தக்ஷர நிலையை
இன்பச் சக்கர விதிதனைக் காட்டிப்
புருவ நடுவணைப் பொற்கம லாசனன்
திருவிளை யாடலின் திருவடி காட்டி
நாதமும் விந்தும் நடுநிலை காட்டிப்
போத நிறைந்த பூரணங் காட்டி
உச்சி வெளிதனை லுள்ளொளி காட்டி
வச்சிரம் பச்சை மரகத முத்துப்
பவள நிறைந்த பளிங்கொளி காட்டிச்
சிவகயி லாசச் சேர்வையுங் காட்டிச்
சத்தம் பிறந்த தலத்தையுங் காட்டித்
தத்துவந் தொண்ணூற் றாறையு நீக்கிக்
கருவி கரணக் களங்க மறுத்து
மருவிய பிறவி மாயையை நீக்கி
உம்பர்கள் ரிஷிகள் ஒருவருங் காணா
அம்பர வெளியி னருளையுங் காட்டிச்
சத்தி பராபரை சதானந்தி நிராமய
நித்திய ரூபி நிலைமையுங் காட்டி
அடியவர் ஞான மமிர்தமா யுண்ணும்டி
வடிவை யறியும் வழிதனைக் காட்டி
நாசி நுனியில் நடக்குங் கலைகள்
வாசிவா வென்று வாங்கிப் பிடித்து
நின்மல வடிவாய் நிறுவித் தப்புறம்
வின்மயமான வித்தையுங் காட்டித்
தராதல முழுதுங் தானாய் நிறைந்த

பராபர வெளியைப் பணிந்திடக் காட்டி
என்னுட லாவி யிடம் பொரு ளியாவுந்
தன்னுடை வசமாந் தவனிலை காட்டி
நானெனு மாணவம் நாசம தாகத்
தானென வந்து தயக்கந் தீர
ஆன குருவா யாட்கொண்டருளி
மோன ஞான முழுது மளித்துச்
சிற்பரி பூரண சிவத்தைக் காண
நற்சிவ நிஷ்களி நாட்டமும் தந்து
குருவுஞ் சிஷனுங் கூடிக் கலந்து
இருவரு மொருதனி இடந்தனிற் சேர்ந்து
தானந்த மாகித் தற்பர வெளியில்
ஆனந்த போத அறிவைக் கலந்து
புவனத் தொழிலைப் பொய்யென் றுணர்ந்து
மவுன முத்திரையை மனத்தினி லிருத்திப்
பெண்டு பிள்ளை பண்டு பதார்த்தங்
கண்டது மாயைக் கனவெனக் காட்டிப்
பாச பந்தப் பவக்கடல் நீக்கி
ஈசனிணையடி யிருத்தி மனத்தே
நீயே நானாய் நானே நீயாய்க்
காயா புரியைக் கனவென வுணர்ந்து
எல்லா முன்செய லென்றே யுணர
நல்லா யுன்னருள் நாட்டந் தருவாய்
காரண குருவே கற்பகக் களிறே
வாரண முகத்து வள்ளலே போற்றி
நித்திய பூஜை நைவேத்தியமும்
பத்தியாய்க் கொடுத்தேன் பரமனே போற்றி
ஏத்தி யனுதின மெளியேன் பணியக்
கூற்றினை யுதைத்த குளிர் பதந் தந்து

ஆசு மசுர வமிர்த மளித்துப்
பேசு ஞானப் பேறெனக் கருளி
மனத்தில் நினைத்த மதுர வாசகம்
நினைவினுங் கனவிலும் நேசம் பொருந்தி
அருண கிரியர ரவ்வை போலக்
கருத்து மிகுந்து கவிமழை பொழிய
வாக்குக் கெட்டா வாழ்வை அளித்து
நோக்கரு ஞான நோக்கு மளித்து
இல்லற வாழ்வை யிடையூ றகற்றிப்
புல்ல ரிடத்திற் புகுந்துழ லாமல்
ஏற்ப திகழ்ச்சி என்ப தகற்றிப்
காப்ப துனக்குக் கடன்கண்டாயே
நல்வினை தீவினை நாடிவருகினிஞ்
செல்வினை யெல்லாஞ் செயலுன தாமால்
தந்தையும் நீயே தாயும் நீயே
எந்தையும் நீயே ஈசனும் நீயே
போத ஞானப் பொருளும் நீயே
நாதமும் நீயே நான்மறை நீயே
அரியும் நீயே அயனும் நீயே
திரிபுர தகனஞ் செய்தவன் நீயே
சத்தியும் நீயே சதாசிவம் நீயே
புத்தியும் நீயே புராந்தகன் நீயே
பத்தியும் நீயே பந்தமும் நீயே
முத்தியும் நீயே மோட்சமும் நீயே
ஏகமும் நீயே என்னுயிர் நீயே
தேகமும் நீயே தேவனும் நீயே
உன்னரு ளன்றி உயிர்த்துணை காணேன்
பின்னொரு தெய்வம் பேசவு மறியேன்
வேதனை கொடுத்த மெய்யிது தன்னில்

வாத பித்தம் வருத்திடு சிலேத்துமம்
மூன்று நாடியும் முக்குண மாகித்
தோன்றும் வினையின் துன்ப மறுத்து
நாலா யிரத்துநானூற்று நாற் பத்தெண்
மேலாம் வினையை மெலியக் களைந்து
அஞ்சா நிலைமை யருளிய நித்தின்
பஞ்சா க்ஷரநிலை பாலித் தெனக்குச்
செல்வமுங் கல்வியும் சீரும் பெருக
நல்வர மேதரும் நால்மறை விநாயகா
சத்திய வாக்குச் சத்தா யதவிப்
புத்திரனே தரும் புண்ணிய முதலே
வெண்ணீ றணியும் விமலன் புதல்வா
பெண்ணா முமையாள் பெற்றிடுந் தேவே
அரிதிரு மருகா அறுமுகன் துணைவா
கரிமுகவராணக் கணபதி சரணம்
குருவே சரணம் குணமே சரணம்
பெருவயிற் றோனே பொற்றாள் சரணம்
கண்ணே மணியே கதியே சரணம்
விண்ணே யொளியே வேந்தே சரணம்
மானத வாவி மலர்த் தடத் தருகில்
தானத்தில் வாழும் தற்பரா சரணம்
உச்சிப் புருவத் துதித்தல் களிக்குஞ்
சச்சிதா னந்த சற்குரு சரணம்
விக்கிந விநாயகா தேவே ஓம்
ஹரஹர ஷண்முக பவனே ஓம்
சிவசிவ மஹா தேவ சம்போ ஓம்

விநாயகர் திருவகவல் முற்றிற்று.

## 3. விநாயகர் துதி -திருவருட்பா

முன்னவனே யானை முகத்தவனே முத்திநலம்
சொன்னவனே தூய்மெய்ச் சுகத்தவனே - மன்னவனே
சிற்பரனே ஐங்கரனே செஞ்சடைஞ் சேகரனே
கற்பரனே நின்தாள் சரண்.

உலகெலாந் தழைப்ப வருன் மதவருவி
ஒழுகுமா முகமும் ஐங்கரமும்
இலகு செம்மேனிக் காட்சியும் இரண்டோடு
இரண்டன் ஓங்கு திண்டோளுந்
திலகவாணுதலார் சித்தி புத்திகளைச்
சேர்த்தணைத் திடும் இருமருங்கும்
விலகுறா தெளியேன் விழைந்தனன் சித்தி
விநாயக விக்கினேச்சுரனே. 1

நாதமுங் கடந்து நிறைந்து நின்மயமே
நானென் அறிந்து நான் தானாய்
பேதமுங் கடந்த மௌன ராச்சியத்தைப்
பேதையேன் பிடிப்பதெந் தாளோ?
ஏதமுஞ் சமய வாதமும் விடுத்தோர்
இதயமும் ஏழையேன் சிரமும்
வேதமுந் தாங்கும் பாதனே சித்தி
விநாயக விக்கினேச்சுரனே. 2

கானல்நீர் விழைந்த மானென வுலகக்
கட்டினை நட்டுழன் றலையும்
ஈனவஞ்சக நெஞ்சகப் புலையேனை
யேன்று கொண்டருள் நாளுளதோ?

ஊனமொன்றில்லா உத்தமருள்ளத்தே
ஓங்கு சீர்ப் பிரணவ வொளியே
வேனவில் கரத்தோர்க் கினியவா சித்தி
விநாயக விக்கினேச்சுரனே. 3

முன்னருந் தவத்தோள் முற்கலன் முதலா
முனிவர்கள் இனிது வீடடைய
இன்னருள் புரியு நின்னருட் பெருமை
இரவினும் பகலினும் மறவேன்
என்னரும் பொருளே என்னியிர்க்குயிரே
என்னரசே, எனதுறவே
மன்னரு நெறியின் மன்னிய வறிவே
வல்லபைக் கணேச மாமணியே. 4

திருவுங் கல்விஞ் சீருஞ் சிறப்புமுன்
திருவடிப் புகழ் பாடுந் திறமும் நல்
உருவுஞ் சீலமும் ஊக்கமுந் தாழ்வுறா
உணர்வுந் தந்தென துள்ளத் தமர்ந்தவா
குருவுந் தெய்வுமுமாகி அன்பாளர்தங்
குறை தவிர்க்குங் குணப்பெருங் குன்றமே
வெருவுஞ் சிந்தை விலகக் கஜானனம்
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. 5

சீத நாண் மலர்ச் செல்வனு மாமலர்ச்
செல்விமார்பகச் செல்வனுங் காண்கிலாப்
பாத நாடொறுப் பற்றறப் பற்றுவோர்
பாத நாடப் பரிந்தருள் பாலிப்பாம்
நாத நாடிய வந்தத் திலோங்கு மெய்ஞ்
ஞான நாடாக நாயக நான்கெனும்

வேத நாடிய மெய்ப்பொருளே யருள
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. 6

தஞ்சமென்றுனைச் சார்ந்தன னெந்தை நீ
தானு மிந்தச் சுகத்தவர் போலவே
வஞ்ச மெண்ணி இருந்திடில் என்செய்வேன்?
வஞ்சமற்ற மனத்துறை அண்ணலே
பஞ்ச பாதகந் தீர்ந்தனை என்று நின்
பாதபங்கயம் பற்றினன் பாவியேன்
விஞ்ச நல்லருள் வேண்டித் தருதிதே
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. 7

கள்ள நெஞ்சகன் ஆயினும் ஐயநான்
கள்ளமின்றிக் கழறுகின்றேன் எனது
உள்ள நின்றிருவுள்ளம் அறியுமே
ஓதுகின்ற தென்போது கழித்திடேல்
வள்ள மாமலர்ப் பாதப் பெரும்புகழ்
வாழ்த்தி நாத்தமும்பேற வழங்குவாய்
வெள்ள வேணிப் பெருந்தகையே அருள்
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. 8

மண்ணிலாசையை மயக்கற வேண்டிய
மாதவர்க்கு மதிப் பரியாயுனை
எண்ணிலார்ச் சிறியோனையு முன்னின்றே
யேன்றுகொண்டனை இன்று விடுத்தியே
உன்னிலாவிய நின்றிருவுள்ளமும்
ஆசையோ டுவரப்புங்கொள வெண்ணுமோ
வெண்ணிலா முடியு புண்ணிய மூர்த்தியே
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. 9

ஆணிலேயன்றி ஆருயிர் பெண்ணிலே
அலியிலே இவ்வடியானைப் போலவே
காணிலேன் ஒரு பாவியை இப்பெருங்
கள்ள நெஞ்சகக் கடையனை ஆளையா
ஏணிலே யிடரெய்த விடுத்தியேல்
என்செய்கேன் இனி இவ்வுலகத்திலே
வீணிலே யுழைப்பேன ருளையனே
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. 10

நாவினாலுனை நாடொறும் பாடுவார் நாடுவார் தமை
நண்ணிப் புகழவும் ஒய்விலாதுணைப் பாடவுந்
துன்பெலாம்
ஓடவும் மகிழ்ோங்கவுஞ் செய்குவாய்
காவிநேர் களத்தான் மகிழ் ஐங்கரக்
கடவுளே நற்கருங்குழி யென்னுமூர் மேவியன்பர்க் கருள்
கண நாதனே விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. 11
- - - - --

## 4. விநாயக கவசம் - கச்சியப்ப சுவாமிகள் அருளியது

கலிவிருத்தம்

அற்புதக் கணபதி யமல போற்றியே
தற்பர சண்முக சாமி போற்றியே
சிற்பர சிவமகாதேவ போற்றியே
பொற்பமர் கௌரி நிற் போற்றி போற்றியே.

வளர் சிகையைப் பரா பரமாய் வியங்கு விநாயகர் காக்க
வாய்ந்த சென்னி அளவு படா வதிகசவுந் தரதேக
மதோற் சுடர்தம் அமர்ந்து காக்க
விளரற நெற்றியை யென்றும் விளங்கிய காசிபர் காக்க
புருவந் தம்மைத் தளர்வின் மகோதரர் காக்க
தடவிழிகள் பாலசந்திர னார் காக்க
கவின் வளரு மதரங் கசமுகர் காக்க
நாலங்கணக் கிரீடர் காக்க
நவில் சிபுகங் கிரிசை சுதர்
காக்கநனி வாக்கை விநாயகர் தாங் காக்க
அவிர்நகை துன் முகர் காக்க
வள்ளெழிற் செஞ் செவி பாச பாணி காக்க
தவிர் தலுறா திளங்கொடி போல்
வளர்மணி நாசியைச் சிந்தி தார்த்தர் காக்க
காமரூபூமுகந் தன்னனக் குணேசர் நனி காக்க
களங் கணேசர் காக்க
வாமமுறு மிருதோளும் வயங்கு கந்த பூர்வசர் தா மகிழ்ந்து
காக்க
ஏமமுறு மணிமுலை விக்கினவினாசன் காக்க
இதயந் தன்னைத் தோமகலுங்கண நாதர் காக்க

வகட்டினைத் துலங்கு ஏரம்பர் காக்க
பக்கமிரண்டையுந் தராதரர் காக்க
பிருட்டத்தைப் பாவ நீக்கும் விக்கினகரன் காக்க
விளங்கிலிங்கம் விபாளபூடணர்தாங் காக்க
தக்ககுய்யந் தன்னைவக் கிரதுண்டர் காக்க
சகனத்தை யல்லல் உக்கண்பன் காக்க
வூருவை மங்கள மூர்த்தி உவந்து காக்க
தாழ் முழந்தாண் மகாபுத்தி காக்க
விருபத மேக தந்தர் காக்க
வாழ் கரம்க்ஷிப்ர பிரசாதனர் காக்க
முன்கையை வணங்குவார் நோய்
ஆழ்தரச் செய் யாசாபூரகர் காக்க
விரல் பதும வத்தர் காக்க
கேழ்கிளரு நகங்கள் விநாயகர் காக்க
கிழக்கினிற் யுத்தீசர் காக்க
அக்கினியிற் சித்தீசர் காக்க
வுமா புத்திரர் சித்தீசர் காக்க
மிக்க நிரு தியிற் கணேசுரர் காக்க
விக்கின வர்த்தனற் மேற்கென்னும் திக்கதனிற் காக்க
வாயுவிற் கசகன் னன் காக்க
திகழு தீசி நிதிபன் காக்க
வடகிழக் கிலீசநந் தனரே காக்க
ஏக தந்தர் பகன் முழுதுங் காக்க
விர வினும் சந்தி யிரண் டன மாட்டும்
ஓகையின் விக்கின கிருது காக்க
விராக்கதர் பூதமுறு வேதாள
மோகினியே யிவை யாதி
உயிர் திறத்தால் வருந்துயரு முடிவிலாத
வேகமுறு பிணி பலவும்

விலக்கு புபா சாங்குசர்தாம் விரைந்து காக்க
மதிஞானத் தவந்தான
மான மொளி புகழ் குலம் வண்சரீர முற்றும்
பதிவான தனந்தானி யங்கிரக மனைவி மைந்தர்
பயினட் பாதிக்
கதியாவுங் கலந்து சர்வாயுதர் காக்க
காமாபவுத்திரர் முன்னான விதியாருஞ் சுற்றமெலா
மயூரேச ரெஞ்ஞான்றும் விரும்பிக் காக்க
வென்றிசீ விதங்க பிலர் காக்க
கரியாதி யெல்லாம் விசுடர் காக்க
என்றிவ்வாறிது தனைமுக்காலாமுமோ திடினும்
பாலிடையூறொன்றும் ஒன்றுறா முனிவரர் காளறி மின்கள்
யாரொருவ ரோதி னாலு மன்ற வாங்கவர் தேகம்
பிணியற வச்சிர தேகமாகி மின்னும்

- - - - - - - - - - - - - - - -